18th August 1961]

SEPTEMBER 1961

| | |
|---|---|
| Monday, the 18th,<br>Tuesday, the 19th,<br>Wednesday, the 20th,<br>Thursday, the 21st,<br>Friday, the 22nd, and<br>Saturday, the 23rd | Clause by Clause consideration of the Madras Land Reforms (Fixation of Ceiling on Land) Bill, 1960. |
| Sunday, the 24th | Holiday. |
| Monday, the 25th | Clause by Clause consideration of the Madras Land Reforms (Fixation of Ceiling on Land) Bill, 1960. |

The House will sit from 8-30 a.m. to 1-30 p.m.

VII.—PRESENTATION OF REPORTS.

(1) THE MADRAS PAWNBROKERS (AMENDMENT) BILL, 1960 (L.A. BILL NO. 30 OF 1960).

THE HON. SRI M. A. MANICKAVELU : Mr. Deputy Speaker, Sir, I beg to present the Report [a] of the Select Committee on the Madras Pawnbrokers (Amendment) Bill, 1960 (L.A. Bill No. 30 of 1960).

(2) THE MADRAS CO-OPERATIVE SOCIETIES BILL, 1961 (L.A. BILL NO. 22 OF 1961).

THE HON. SRI R. VENKATARAMAN : Mr. Deputy Speaker, Sir, I beg to present the Report [b] of the Select Committee on the Madras Co-operative Societies Bill, 1961 (L.A. Bill No. 22 of 1961).

(3) THE MADRAS LAND REFORMS (FIXATION OF CEILING OF LAND) BILL, 1960 (L.A. BILL NO. 8 OF 1960).

THE HON. SRI M. A. MANICKAVELU : Mr. Deputy Speaker, Sir, I beg to present the Report [c] of the Joint Select Committee on the Madras Land Reforms (Fixation of Ceiling on Land) Bill, 1960 (L.A. Bill No. 8 of 1960).

(4) THE MADRAS IRRIGATION CESS (AMENDMENT) BILL, 1961 (L.A. BILL NO. 17 OF 1961).

THE HON. SRI M. A. MANICKAVELU : Mr. Deputy Speaker, Sir, I beg to present the Report [d] of the Select Committee on the Madras Irrigation Cess (Amendment) Bill, 1961 (d) (L.A. Bill No. 17 of 1961).

---

a Printed as Appendix V on pages 133–144 infra.

b Printed as Appendix VI on pages 145–223 infra.

c Printed as Appendix VII on pages 223–337 infra.

d Printed as Appendix VIII on pages 338–340 infra.

[18th August 1961

(5) COMMITTEE ON SUBORDINATE LEGISLATION.

SRI K. VINAYAKAM : Mr. Deputy Speaker, Sir, I, as the Chairman of the Committee on the Subordinate Legislation, beg to present the Thirteenth Report (Second Assembly) of the Committee.

## VIII.—THE MADRAS STATE ELECTRICITY BOARD BUDGET, 1961–62

THE HON. SRI V. RAMAIAH : Mr. Deputy Speaker, Sir, I beg to move—

'That the Annual Financial Statement for 1961–62 and the Supplementary Financial Statement for 1960–61 of the Madras State Electricity Board laid on the table of the House be taken up for discussion'.

இந்த இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் முடிந்த பிறகு, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டகாலத்தில் முதல் வருஷமாக இருக்கக்கூடிய இந்த நேரத்தில், மின்சாரக் குழு செய்துகொண்டிருக்கக்கூடிய பல்வேறு திட்டங்களை விளக்கமாகச் சொல்லக்கூடிய முறையிலே ஒரு விரிவான அறிக்கையைத் தயார் செய்து கனம் அங்கத்தினர்களுக்கு இரண்டு தினங்களுக்கு முன்கூட்டியே கொடுத்திருக்கிறேன். இந்த அறிக்கையைக் கவனித்துப் பார்த்தால் நமது மாநிலத்திலே மின்சார வளர்ச்சி எத்தனை வேகமாக ஏற்பட்டுக்கொண்டிருக்கிறது என்பதை நாம் நன்றாகப் புரிந்து கொள்ள முடியும். குறிப்பாக இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் முடிவடைந்த நேரத்திலே மின்சாரத் தேவையைப் பொறுத்த வரையிலே, விவசாயத் துறையை எடுத்துக் கொண்டாலும் சரி, சிறு தொழில்களை நடத்தக்கூடியவர்களை எடுத்துக் கொண்டாலும் சரி, அல்லது பெரிய தொழிற்சாலைகளை ஏற்படுத்தியிருக்கக்கூடியவர்களுடைய தேவையை எடுத்துக் கொண்டாலும் சரி, அது வளர்ந்து கொண்டே இருக்கிறது. இந்த வளர்ச்சியைப் பரிபூரணமாக உணர்ந்து இருக்கக்கூடிய காரணத்தினால் தேவையைப் பூர்த்தி செய்யக்கூடிய முறையிலே மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே மின்சார சக்தியின் உற்பத்திக்கு மிக முக்கியமாக இடம் கொடுக்கப்பட்டிருக்கிறது. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்திலே ஏறத்தாழ 100.19 கோடி ரூபாய் வரைக்கும் செலவு செய்ய வேண்டும் என்று நாம் முடிவு செய்திருக்கிறோம். ஆனால் இப்பொழுது இந்த மாநிலத்திலே ஏற்பட்டிருக்கக்கூடிய தேவையை நாம் முறையாகப் பார்த்தோமானால், இப்பொழுது நாம் மேற்கொண்டு இருக்கக்கூடிய திட்டங்கள் கூட நமது தேவையை மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் முடியக்கூடிய நேரத்தில் பூர்த்தி செய்யாது போகுமோ என்ற ஒரு நிலைமை ஏற்படுகிறது. அதுபற்றி விவரமாக எவ்வளவு பற்றாக்குறை இருக்கும் என்பதை இந்த அறிக்கையிலே எடுத்துக் காட்டியிருக்கிறேன்.